# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

## சொல்வளமே மொழி வளம்

வயல் : 2 விளைச்சல் : 14 திருவள்ளுவர் ஆண்டு 2052 மே திங்கள் - 2021



தொழிலாளர் கலைச் சொற்கள்

வண்ணத்திற்குள் எத்தனை வண்ணங்கள்

கண்டங்கத்திரி

தமிழ் வளர்க்கும் இல்லதரசிகள்

எத்தனை வகை நாட்டு மாடுகள்

37 பேருக்கு சொல்லின்தாய் விருது



# தொழிலாளர் கலைச்சொற்கள்

1.Baker - அடுமனையாளர்
2.Chef - தலைமை சமையல்காரர்
3.Pilot - வலவன்
4.Security - காப்பாளர்
5.Beautician - ஒப்பனையாளர்
6.Business tycoon - பெருவணிகர்
7.Cardiologist - நெஞ்சுநோய் மருத்துவர்
8.Care taker - நலங்காப்பாளர்
9.Caricaturist - பகடியோவியர்
10.Cartographer - நிலப்படம் வரைஞர்
11.Cartoonist - கருத்துப்படம் வரைஞர்
12.Cattle breeders - கால்நடை வளர்ப்போர்
13.Cerealist - கூல ஆய்வர்
14.Chief Secretary - தலைமைச் செயலாளர்
15.Chronologist - காலக்கணிப்பாய்வாளர்
16.Civil engineer - கட்டடப் பொறிஞர்
17.Civilist - குடிமையியல் சட்ட வல்லுநர்
18.Depositary - ஏமவைப்புக் காப்பாளர்
19.Instrument repairer - கருவி செப்பனீட்டாளர்
20.Jailor - சிறையலுவலர்
21.Journalist - இதழாளர்
22.Licenser - உரிமம் வழங்குநர்
23.Psychologist - உளவியலாளர்
24.Shorthand writer - சுருக்கெழுத்தர்
25.Steno-typist - சுருக்கெழுத்துத் தட்டச்சர்

சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

திருவள்ளுவர் ஆண்டு 2052 - சித்திரை
மே - 2021

ஆசிரியர் : தங்க. காமராசு
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்திக்

இதழ்க்குழு : திருமதி. ஜெ. சாந்தி
திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திரு. ப. தீபக்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர், சென்னை - 600 028.
கட்டணமில்லா அழைபேசி : 14469
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com


உலகத் தமிழர்களின் படைப்புகள், செய்தித் துணுக்குகள், நிகழ்வுகளின் ஒளிப்படங்கள் ஆகியவை வரவேற்கப்படுகின்றன



# ஆசிரியர் பேசுகிறார்

## தமிழே தலைமை ஏற்றது!

அன்பானவர்களே! வணக்கம்.

பெருந்தொற்றின் அச்சுறுத்தல் ஒரு பக்கமிருந்தாலும், தமிழ்நாட்டை தலைமையேற்று வழி நடத்த தமிழே அரியணை ஏறியிருப்பதுபோல, கலைஞரின் தளபதியாக அடையாளம் காணப்பட்ட திரு. மு.க. ஸ்டாலின் அவர்கள் தமிழ்நாட்டின் மாண்புமிகு முதலமைச்சராகப் பொறுப்பேற்றிருப்பது நமக்கு மகிழ்ச்சியை அளிக்கிறது. இயற்கை இடர்ப்பாடுகள் தானாக விலகும், பெருந்தொற்று நோய்ச் சுவடுகூட இல்லாமல் நீங்கும், அன்னைத் தமிழ்நாட்டை ஆற்றலுடன் ஆட்சிச் செய்ய மேற்கொள்ளும் பயணத்தின் பாதைகளில் கல்லாகவும், முள்ளாகவும் கிடக்கும் தடைகள் மறையும். ஏற்றமிகு திட்டங்களை வாரி வழங்கும் வள்ளலாகவும், வான்புகழ் தமிழ்நாட்டை வளமிக்க தமிழ்நாடாக மாற்றும் வல்லமையை மாண்புமிகு முதலமைச்சர் திரு. மு.க. ஸ்டாலின் அவர்கள் பெறுவார்கள்.

1974–ஆம் ஆண்டு தந்தை கலைஞர் அவர்களால் உருவாக்கப்பெற்ற, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தை வளர்த்தெடுக்க தனயனாகவும் தளபதியாகவும் வந்திருக்கும் மாண்புமிகு முதலமைச்சர் அவர்களைப் பாராட்டி வாழ்த்துகிறோம்.

இந்த மகிழ்ச்சியான நேரத்தில் பெருந்தொற்றின் (கொரோனா) இரண்டாவது அலையினால் ஏற்பட்டுள்ள தாக்கத்தை நாம் கடந்துக் கொண்டிருக்கின்றோம். ‘இதுவும் கடந்து போகும்’ என்ற மனநிலைக்கு நாம் வர வேண்டும். அச்சமும், பதட்டமும் கூட ஒருவகை நோய்தான். இரண்டுமே நம்மை வலிமை இழக்கச் செய்யும். அதனால், தீநுண்மி நம்மை எளிதாகத் தொற்றிக் கொள்ளும் என்கின்றனர் சில மனநல மருத்துவர்கள். அதையும் நாம் கருத்தில் கொள்ள வேண்டும். மருத்துவ வல்லுநர்கள் கூறும் அறிவுரைகளை கடைபிடித்து, மன உறுதியுடன் எதிர்கொண்டால் இந்தப் பெருந்தொற்று நம்மை நெருங்காது என்பது என்னுடைய கருத்தும்கூட. இப்பெருந்தொற்றினால் நாம் சில பாடங்களைக் கற்றுக்கொண்டு நம்மை நாமே தற்காத்துக்கொள்ள வேண்டும்.

தொலைக்காட்சிகள்கூட நமக்கு செய்திகளைச் சொல்லும் ஊடகமாக மட்டுமில்லாமல் குழந்தைகளை அச்சுறுத்தும் பூச்சாண்டிகளைப்போல் செயல்படுகின்றன. மனத்திற்குள் அதிர்வை ஏற்படுத்தும் விதமாக மோசமான ஒலி இரைச்சலுடன் கூடிய அண்மைச் செய்திகளை (Breaking News) வீடு முழுவதும் பரவவிடுகின்றன, வரும்முன் காக்கும் அறிவுரைகள், விழிப்புணர்வு ஆவணப்படங்கள், உண்மைச் செய்திகள், அரசு அறிவிப்புகள் ஆகியவற்றை அறிவிப்பதோடு தன் பங்கை தொலைக்காட்சி ஊடகங்கள் கட்டுப்படுத்திக்கொள்ளலாம் என்பது என் கருத்து.

ஒவ்வொரு தொலைக்காட்சியும் போட்டிப் போட்டுக் கொண்டு மக்களை அச்சுறுத்தும் நிழ்ச்சிகளை ஒளிபரப்புவதை நிறுத்திக்கொள்ள வேண்டும். ஒளிபரப்பப்படும் விளம்பரங்கள் கூட மக்களுக்கு பயன்படும்வகையில், மக்களின் நலனுக்கு கேடுவிளைவிக்காதவைகளாக இருக்க வேண்டும். 33 விழுக்காடு பொழுதுபோக்கு, 33 விழுக்காடு அறிவித்தல் (கல்வி), 34 விழுக்காடு செய்தி என்றுதான் ஊடகங்கள் பகிர்ந்து செயல்பட வேண்டும்.

இது ஒருபுறமிருக்க, மொழியை வளர்க்கின்ற ஊடகங்கள் மிகக் குறைவாகவே இருக்கின்றன. தொலைக்காட்சிகளில் தாய்மொழியுடன் ஆங்கிலம் மற்றும் பிறமொழிச் சொற்களை கலந்து பேசுகின்றனர். ‘தொலைக்காட்சி மொழி’ என்று ஒரு தனிமொழியை ஊடகங்கள் உருவாக்கியிருக்கின்றன. தூயமொழியில் பேசுகின்றவர்களை அழைத்து நேர்காணல் செய்து வியக்கின்ற களமாக தொலைக்காட்சி ஊடகங்கள் இருக்கின்றன. நிகழ்ச்சித் தயாரிப்பாளர்களும், தொகுப்பாளர்களும், செய்தி ஆசிரியர்களும், செய்தி அறிவிப்பாளர்களும் முழுமையான மொழியறிவுப் பெற்றவர்களாக இருக்க வேண்டும். மொழியுணர்வுடன் சொல் உச்சரிப்பு, செய்திக்கு ஏற்றாற்போன்ற உணர்வு ஆகியவற்றையும் பெருந்தகுதியாக உடையவர்களே திரையிலும், திரைக்குப் பின்னணியிலும் இருக்க வேண்டும். அப்படிப்பட்டவர்களைக்கொண்ட ஊடகங்களே சிறந்த ஊடகங்களாக இருக்க முடியும்.

தமிழ்நாட்டிலுள்ள காட்சி மற்றும் அச்சு ஊடகங்களில் மொழிச்சார்ந்த படைப்புப் பணிகளில் சேர விருப்பமுள்ளவர்கள் கட்டாயம் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்திடம் மொழிப்பயிற்சிப் பெற்று அதற்கான சான்றிதழை விண்ணப்பத்துடன் இணைக்க வேண்டும் என்று அந்தந்த ஊடங்கள் அறிவிக்க வேண்டும். அப்போதுதான் தகுதியானவர்கள் ஊடகப்பணியில் சேர முடியும், ஊடகங்களின் தகுதியும் மேம்படும்.

ஆண், பெண் வெளித்தோற்றத்தைப் பார்த்து பணியில் சேர்த்துக்கொள்ளும் ஊடங்களினால் மொழிக்கு எந்தப் பயனுமில்லை. மக்களை மகிழ்விக்கின்றோம் என்ற பெயரில் பண்பாட்டையும், மரபையும் சீரழிக்கின்ற நிகழ்ச்சிகளை மட்டுமே நடத்திக் கொண்டிருக்கின்ற சில தொலைக்காட்சிகளால், அந்தந்த தொலைக்காட்சி உரிமையாளர்களுக்குத்தான் பயனே தவிர, மக்களுக்கோ, மொழிக்கோ, நாட்டுக்கோ பெரிதாக என்ன பயன் கிட்டிவிடப்போகின்றது?

இதையெல்லாம் கருத்தில் கொண்டுதான் தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் சார்பில் இந்தாண்டு முதல் தூயதமிழ் ஊடக விருதை அறிவித்திருக்கிறது. தமிழ்மொழியிலுள்ள தொலைக்காட்சி நிகழ்ச்சிகளை ஆய்வு செய்ய, கல்லூரி மாணவர்கள், பொதுமக்கள், தமிழறிஞர்கள் எனப்பலதரப்பட்டவர்களைக் கொண்ட குழுவைக்கொண்டு தனித்தனியாக ஆய்வு செய்து அறிக்கையை வேண்டியிருந்தோம். அதன்படி அறிக்கையைப் பெற்று, அதனைத் தகுதியானவர்களை நடுவர்களைக் கொண்டு ஆய்வு செய்து மதிப்பெண் அடிப்படையில் தரமான, தகுதியான ஒரு அச்சு ஊடகத்தையும், காட்சி ஊடகத்தையும் தேர்வு செய்திருக்கின்றோம்.

வெற்றியாளர்களுக்கு தலா உரூபா 50 ஆயிரமும், தங்கப்பதக்கமும் வழங்கப்படும். இந்த விருது ஒரு மொழி விழிப்புணர்வை நிச்சயம் ஏற்படுத்தும் என்பது அரசின் நம்பிக்கை. மொழிவளர்ச்சிக்கும், பாதுகாப்பிற்கும் அரசு நிலையில் எடுக்கப்படும் சிறந்த முயற்சியாக இதைக் கருதலாம். மக்கள் தொடர்பியல், ஊடகவியல் துறைகளில் அரசு நிலையில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் அதிக கவனமும் அக்கறையும் எடுத்து வருகிறது. விரைவில் இந்த இயக்ககம் மொழியைப் பாதுகாக்கும் ஒரு இயக்ககமாக உருவாகும். அப்போது இது ஒரு தூயதமிழ் கல்வி நிறுவனமாகவும் மேம்பட்டு தமிழ்ப்பணியாற்றும் என்பதில் எனக்கு சிறிதும் ஐயமில்லை. எனக்கு இந்த நம்பிக்கையை ஊட்டியவர்கள் உலகம் முழுவதிலிலுமுள்ள ஆயிரக்கணக்கான தமிழன்பர்களான நீங்கள்தான் என தெரிவிப்பதில் நான் மட்டற்ற மகிழ்ச்சியடைகிறேன்.

மீண்டும் சந்திப்போம்.

# அறிய வேண்டிய அரிய செய்தி - 12

## வண்ணத்திற்குள் எத்தனை எண்ணங்கள்

வண்ணம் என்பதற்கு நிறம் என்பதுதான் நேர்ப்பொருள் எனினும் அழகு, சிறப்பு, தன்மை, குணம், செயல் என இருபதுக்கும் மேற்பட்ட பொருள்களைத் தமிழ்மொழி அடக்கியுள்ளது.

வண்ணம் என்பது ஒளி அலையில் தோன்றும் வகைப்பாடு என்கிறது அறிவியல். ஏழு வண்ணங்களில் அலைநீளம் குறைவானது சிவப்பு; அலைநீளம் அதிகமாக இருப்பது செந்நீலம் (Violet); மற்றவை இவற்றிடை, வண்ணம் என்பது கண் என்ற கருவியால் மட்டுமே உணரப்படும் விந்தை விளையாட்டு.

கருப்பு, வெள்ளை என்ற இரண்டையும் வண்ணமாகவே உணர்கிறது மக்களினம். அனைத்து நிறமும் ஒன்று சேர்ந்தால் வெள்ளை; ஒரு நிறமும் இல்லையென்றால் அது கருப்பு (இருட்டு)

சில நிறங்கள் மிரட்சியையும், சில அமைதியையும், சில மகிழ்ச்சியையும் ஏற்படுத்துகின்றன. எனவே, நிறங்களை நிறங்களாக மட்டுமே பார்க்காமல் உணர்வாகவும், பல கருத்துகளை அடக்கியும் மக்களினம் ஒவ்வொரு மொழியிலும் பல்வேறாகப் பதிவு செய்துள்ளது.

எடுத்துக்காட்டாக, ஆங்கிலத்தில் Black Sheep, Black mail, Black market, Black money என்ற சொற்களில் கருப்பு வண்ணத்திற்கு இடமில்லை.

**கறுப்பு**

கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருளைக் குறிப்பதாகத் தொல்காப்பியம் கூறும். கறுப்பிற்குச் சினம், குற்றம், கறை, தழும்பு என அகரமுதலி பொருள் கூறும்.

முகம் கறுத்து விட்டது – இது உலக வழக்கு.

இறந்தவர்க்குக் கறுப்பு – இது கொங்குவட்டார வழக்கு.

துயரத்தையும் எதிர்ப்பையும் தெரிவிக்கக் கறுப்பைப் பயன்படுத்துவர் உலக மக்கள்.

**வெள்ளை**

கருப்புக்கு நேர் எதிராகப் பார்க்கப்படுகிறது வெள்ளை.

“வெள்ளைக்கில்லை கள்ளச் சிந்தை” என்கிறது அறநெறிச்சாரம்.

வெள்ளைமனம் – கள்ளமில்லாத மனம்.

வெள்ளையறிவு – அறிவில்லாத நிலை.

வெள்ளையறிக்கை – உண்மை அறிக்கை (புதியவரவு).

**பச்சை**

| | |
|---|---|
| பச்சைத் தண்ணீர் | – இயல்பான குளிர்நீர். |
| பச்சைக் காய்கறி | – வேகவைக்கப்படாத காய்கறி. |
| ‘பச்சையாகச் சொன்னால்’ | – வெளிப்படையாகச் சொன்னால். |
| பச்சையாய்ப் பேசுகிறான் | – நாகரிகமின்றிப் பேசுகிறான். |
| பச்சிளங்குழந்தை | – பிறந்த குழந்தை. |
| பச்சைப்புளுகு | – முழுப்பொய். |
| பச்சைமண் | – பிசைந்து வடிவமைக்கப்படாத ஈரமண். |
| | கள்ளங்கவடு இல்லாத பையன் அல்லது பெண். |
| பச்சையுடம்பு | – பிள்ளை பெற்றுத் தேறாத உடம்பு. |

**சிவப்பு**

சினம் என்று பொருள் எனப் பார்த்தோம்.

செம்மையாக உள்ளது – முழுமையாக உள்ளது.
நன்றாக உள்ளது.

செம்மைக்கு நல்ல, நேர்மை, கோட்டமின்மை, பெருமை, தூய்மை, அழகு என்பன அகரமுதலிகள் கூறும் பலபொருள்கள்.

| | |
|---|---|
| செங்கோல் | – நேரான கோல். |
| செங்குத்தாக நடு | – சாயாது நேராக நடு. |
| செங்காய் | – காயுமல்லாது பழமும் அல்லாத இடைநிலை. |
| சிவப்பு நாடா | – Red tape – அதிகாரவெறி |

– இவை புதிய வரவுகள்

**மஞ்சள்**

வெண்மைக் குறைந்த மங்கலான நிறமாக மஞ்சள் பார்க்கப்பட்டது. நிறத்தையே பெயராகக் கொண்ட கிழங்கு ‘மஞ்சள்’.

மங்கல் – மஞ்சள்

மஞ்சள் நல்ல நிகழ்ச்சிகள் அனைத்திலும் பயன்படும் பொருள்.

மஞ்சள் நீராட்டு, மங்கலநாண், மங்கலநாள்.

மஞ்சள் அறிக்கை – Yellow Notice - நொடிவு அறிக்கை Insolvency Notice

**நீலம்**

நீண்டிருக்கும் கடலிலும் வானிலும் இவ்வண்ணம் பார்க்கப்பட்டது. கடலின் நீல வண்ணம் நீருக்கு ஆகி வந்தது.

நீள் – நீலம் – நீர்; 'நீலு' என்பது தெலுங்கில் நீரைக் குறிப்பது இங்குக் கவனிக்கத்தக்கது.

"முந்நீர் வழக்கம் மகடூஉ வோடில்லை" என்கிறது தொல்காப்பியம்.

நீலநிலவு – ஒரு திங்களில் வரும் கூடுதல் முழுநிலவு

அலை பகிரி – என்பன புதிய வரவுகள்

இவ்வாறு வண்ணங்கள் அக்காலத்திலிருந்தே எண்ணங்களாகப் பதியப் பெற்றுள்ளன.

'இவ்வண்ணம் நிகழ்ந்த வண்ணம்
இனி இந்த உலகுக்கு எல்லாம்
உய் வண்ணம் அன்றி மற்று ஓர்
துயர் வண்ணம் உறுவது உண்டோ ?
மை வண்ணத்து அரக்கி போரில்
மழை வண்ணத்து அண்ணலே! உன்
கை வண்ணம் அங்குக் கண்டேன்
கால் வண்ணம் இங்குக் கண்டேன்.

என்ற வரிகள் கம்பர் குழைத்துத் தீட்டிய வண்ணப்பாவியம்!

அதையே "பால் வண்ணம் பருவம் கண்டு வேல் வண்ணம் விழிகள் கண்டு" என்று, பலவாறு எதிரொலித்துக் காட்டியது கண்ணதாசனின் திரை ஓவியம்!

– எனச்சான்றுகள் காட்டி பல வகையில்

வண்ணங்களில் இத்தனை எண்ணங்கள் அமைந்ததை ஒருங்கிணைத்து

நீங்கள் காணும் வண்ணம் தொகுத்துரைத்தேன்.

முனைவர் மா. பூங்குன்றன்
பதிப்பாசிரியர் – அகரமுதலி இயக்ககம்.

# கண்டங்கத்தரியைக் கண்டால் விடாதீர்கள்!



கரிசல் மண், வண்டல் மண் மற்றும் செம்மண் இது தவிர, தரிசு நிலங்களிலும் வளரக்கூடியது கண்டங்கத்தரிச் செடி. 'கண்டம்' என்ற சொல்லுக்கு 'தொண்டை' என்று பொருள். அதன் அடிப்படையில், தொண்டையில் நமக்கு ஏற்படுகின்ற எரிச்சல், வலி, கமறல், தொண்டை கட்டுதல் முதலான பாதிப்புகளை இம்மூலிகைக் குணப்படுத்துவதால் இம்மூலிகைக்கு 'கண்டங்கத்தரி' என்ற பெயர் வந்தது.

பெரிய சுண்டை. கசங்கி போன்ற வேறு பெயர்களாலும் கண்டங்கத்தரி அழைக்கப்படுகிறது. நோய் எதிர்ப்புச் சக்தியை ஏராளமாகக் கொண்டுள்ள கண்டங்கத்தரிக்கு தொண்டையில் நுழைந்து நம் உயிரைப் பறிக்கும் கொரோனா தொற்றுநோயைக்கூட தடுக்கும் ஆற்றல் உண்டு.

இருமல், மார்புச் சளி போன்றவற்றால் துன்பப்படும் குழந்தைகளுக்கு இதன் காய், பழம் ஆகியவற்றை நசுக்கி, தேனுடன் கலந்து கொடுக்க விரைவில் குணம் அடைவார்கள்.

# எத்தனை வகை நாட்டு மாடுகள்

1.அத்தக்கருப்பன்
2. அழுக்குமறையன்
3.அணறிகாலன்
4. ஆளைவெறிச்சான்
5.ஆனைச்சொறியன்
6. கட்டைக்காளை
7.கருமறையான்
8. கட்டைக்காரி
9. கட்டுக்கொம்பன்
10. கட்டைவால் கூளை
11.கருமறைக்காளை
12. கண்ணன் மயிலை
13. கத்திக்கொம்பன்
14. கள்ளக்காடன்
15. கள்ளக்காளை
16. கட்டைக்கொம்பன்
17. கருங்கூழை
18.கழற்வாய்வெறியன்
19. கழற்சிக்கண்ணன்
20.கருப்பன்
21.காரிக்காளை
22. காற்சிலம்பன்
23.காராம்பசு
24. குண்டுக்கண்ணன்
25. குட்டைநரம்பன்
26. குத்துக்குளம்பன்
27. குட்டை செவியன்
28. குள்ளச்சிவப்பன்
29.கூழைவாலன்
30.கூடுகொம்பன்
31. கூழைசிவலை
32. கொட்டைப்பாக்கன்
33.கொண்டைத்தலையன்
34. ஏரிச்சுழியன்
35.ஏறுவாலன்
36. நாரைக்கழுத்தன்
37. நெட்டைக்கொம்பன்
38. நெட்டைக்காலன்
39.படப்புப்பிடுங்கி
40. படலைக் கொம்பன்
41. பட்டிக்காளை
42. பனங்காய் மயிலை
43. பசுங்கழுத்தன்
44. பால்வெள்ளை
45. பொட்டைக்கண்ணன்
46.பொங்குவாயன்
47. போருக்காளை
48. மட்டைக் கொலம்பன்
49. மஞ்சள் வாலன்
50. மறைச்சிவலை
51.மஞ்சலி வாலன்
52. மஞ்ச மயிலை
53.மயிலை
54. மேகவண்ணன்
55. முறிகொம்பன்
56.முட்டிக்காலன்
57.முரிகாளை
58.சங்குவண்ணன்
59.செம்மறைக்காளை
60. செவலை எருது
61. செம்ம(பு)றையன்
62.செந்தாழைவயிரன்
63.சொறியன்
64.தளப்பன்
65. தல்லயன் காளை
66. தறிகொம்பன்
67.துடைசேர்கூழை
68. தூங்கச்செழியன்
69. வட்டப்புல்லை
70. வட்டச்செவியன்
71. வளைக்கொம்பன்
72. வள்ளிக் கொம்பன்
73. வர்ணக்காளை
74. வட்டக்கரியன்
75. வெள்ளைக்காளை
76. வெள்ளைக்குடும்பன்
77. வெள்ளைக்கண்ணன்
78. வெள்ளைப்போரான்
79.மயிலைக்காளை
80.வெள்ளை
81.கழுத்திகாபிள்ளை
82.கருக்காமயிலை
83. பணங்காரி
84. சந்தனப்பிள்ளை
85. செம்பூத்துக்காரி
86. காரிமாடு
87. புலிகுளம் காளை





# அகரமுதலி இயக்ககம் வாயிலாக இணைய வழியில் தமிழ் வளர்க்கும் இல்லத்தரசிகள்!

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மற்றும் இன்தமிழ் இல்லத்தரசிகள் சங்கம் இணைந்து **"இல்லந்தோறும் இனிய தமிழில் பேசுவோம்"** என்ற தலைப்பில் 13.04.2021 செவ்வாய்க்கிழமை அன்று மாலை 7.00 மணி முதல் 8.00 மணி வரை இணையவழியில் கருத்தரங்கம் நடைபெற்றது. இந்த நிகழ்வில் சங்க உறுப்பினர்கள் கலந்துக்கொண்டனர். வரவேற்புரை வழங்கியவர் கோயம்புத்தூர், முனைவர் அ.ஷர்மிலா பானு. இக்கருத்தரங்கில் கலந்து கொண்ட அனைவரையும் வரவேற்று பேசினார். இந்நிகழ்ச்சியை முனைவர் ஆ.இந்திரா பிரியதர்ஷினி தொகுத்து வழங்கினார்.

இக்கருத்தரங்கின் தொடக்கவுரையைச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் தொகுப்பாளர், திருமதி ஜெ.சாந்தி வழங்கினார். தமிழ் சொற்களின் முக்கியத்துவத்தைப் பற்றியும் ஒரு சொல்லுக்கு பல தமிழ்ச் சொற்கள் உண்டு என்று எடுத்துக் காட்டுடன் விளக்கினார். எடுத்துக்காட்டாக நாம் அன்றாட வாழ்வில் பயன்படுத்தும் "தைரியம்" என்ற சொல் தமிழ் சொல் அல்ல அதற்கு இணையான தமிழ் சொல் "வீரம், திண்மை, திடம்". அதே போல "பிரபலம்" என்ற சொல்லுக்கு இணையான தமிழ் சொல் "புகழ், வல்லமை" என்றும் மேலும் பல சொற்களுக்கு சரியான தமிழ் சொற்களை கூறினார். பாரதியாரின் தமிழ் பற்றையும் திருக்குறளின் முக்கியத்துவத்தைப் பற்றியும் கூறினார். இறுதியாக 38 மாவட்டங்களிலிருந்தும் தமிழ் ஆர்வலர்களை இக்கருத்தரங்கில் கலந்துகொள்ள வகை செய்யுமாறு அ.ஷர்மிலா பானு அவர்களிடம் கேட்டுக்கெண்டார்.

இந்நிகழ்வில் பொறியியல் செயல்பாட்டு இயக்குநர் திருமதி புவனேஸ்வரி சுப்பிரமணி, அவர்கள் "தன்னம்பிக்கை" என்னும் தலைப்பில் பேசினார். தொடக்க நிலையில் தமிழில் பேச தயக்கத்துடன் இருந்ததாகவும் இக்கருத்தரங்கங்களில் பங்கு பெற்று பலர் உறுதுணையுடன் இப்பொழுது தயக்கமின்றி பேச கற்றுக்கொண்டதாகவும் பேசினார்.

அடுத்ததாக ஆசிரியை திருமதி க.விஜயபரமேஸ்வரி அவர்கள் தமிழர் பண்பாட்டைப் பற்றியும் வீட்டில் குழந்தைகளுக்கும் தமிழில் பேச கற்றுத் தர வேண்டும் என்று கூறினார். 14469 என்ற எண்ணிற்குத் தொடர்புக் கொண்டு பேசியபோது செந்தமிழ் சொற்பிறப்பியல் இயக்ககம் எனக்கிருந்த ஐயங்களைப் போக்கினர். பாரதியாரின் "யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல் இனிதாவதெங்குங் காணோம்" என்ற சொற்றொடரை நினைவுப்படுத்தி, தமிழைப் பற்றியும் பாரதியாரின் புகழைப் பற்றியும் கூறினார். இக்கருத்தரங்கு தனக்கு மேலும் தமிழில் பேசவும் பல செய்திகளை அறிந்து கொள்ள உதவும் என்றும் பேசினார்.

நிகழ்ச்சியின் முடிவில் சுய உதவிக்குழுத் தலைவர், திருமதி அ.தில்ஷாத் பானு நன்றி கூறினார். இச்சங்கத்தின் மூலம் பலருடைய தமிழின் மீதுள்ள ஆர்வமும் தூய தமிழ் பேசும் தன்னம்பிக்கையும் வளர்ந்துள்ளது மேலும் இக்குழுவின் தமிழ் ஆர்வலர்களின் எண்ணிக்கை விரிவடைய வேண்டும் என்று கூறினர். இணையவழியில் நடந்த இக்கருத்தரங்கில் பல்வேறு தமிழ் ஆர்வலர்கள், கவிஞர்கள், கல்லூரி மாணவர்கள் கலந்து கொண்டனர்.

# கல்லூரி மாணவர்களுக்கு சொல்லின்தாய் விருது



■ மாவட்டத்திற்கு ஒருவர் வீதம் மொத்தம் 37 பேருக்கு வழங்கப்படுகிறது

கலைச்சொல்லாக்கத்தில் சிறந்து விளங்கும் கல்லூரி மாணவர்களைப் பாராட்டும் வகையில், மாவட்டத்திற்கு ஒருவர் வீதம் 37 மாணவர்களைத் தெரிவுசெய்து செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் சார்பாகத் தமிழ் அகராதியியல் நாள் விழாவின் போது **"சொல்லின்தாய் விருது"** வழங்கப்படவுள்ளது.

37 மாவட்டங்களைச் சார்ந்த கல்லூரி மாணவர்கள் பலர் கல்லூரிக்கல்வி இயக்ககத்திற்கு விண்ணப்பித்திருந்தார்கள். அவர்கள் அனுப்பியச் சொற்களை ஆய்வு செய்து அவற்றில் சிறந்த கலைச்சொற்களை வழங்கிய மாணவர்களைத் தேர்வு செய்து அவர்களிலிருந்து சிறந்த 57 மாணவ மாணவியரை செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்திடம் கல்லூரிக்கல்வி இயக்ககம் பரிந்துரை செய்தது.

ஒவ்வொரு மாவட்டத்திலிருந்தும் ஒன்றுக்கு மேற்பட்ட மாணவர்களின் விவரப் பட்டியல் வந்துள்ள நிலையில், அந்த மாணவர்களிலிருந்து விருதுபெறத் தகுதியானவர்களைச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக் கழகத்தின் அலுவல்சாரா உறுப்பினர்களும் சொல்லாக்க வல்லுநர்களுமாகிய **முனைவர் இரா.கு. ஆல்துரை. திரு. அ.மதிவாணன்** ஆகியோரைக் கொண்டு **29.03.2021** ஆம் நாள் தேர்வுசெய்யப்பட்டு அதனடிப்படையில் விருதுபெறத் தகுதியானவர்களாக்கக் கருதத்தக்கோர் பட்டியல் இயக்கக நிலையில் அணியமாக்கப்பட்டது

இப்பட்டியலிலிருந்து மாவட்டத்திற்கு ஒரு வெற்றியாளரை அரசு நிலையில் தேர்வு செய்து அரசாணை வழங்கக்கோரி அரசுக்கு மடல் அனுப்பப்பட்டது. அரசு நிலையில் வெற்றியாளர்கள் தேர்வுசெய்யப்பட்டு, அதற்கான அரசாணை வழங்கப்பட்டதும் அதுதொடர்பாக முறையாக அறிவிப்பு வெளியிடப்படும் வெற்றியாளர்களுக்கு அகரமுதலி இயக்ககத்தின் சார்பில் கொண்டாடப்படும் 'தமிழ் அகராதியியல் நாள் விழாவின் போது "சொல்லின்தாய் விருதுக்கான பரிசுத்தொகை ரூ.10,000/- (ரூபாய் பத்தாயிரம் மட்டும்) மற்றும் தகுதியுரை வழங்கப்படும்.

## இணையவழியில் தமிழ்க் கலைக்கழகத்தின் 83ஆவது கூட்டம் நடைபெற்றது !

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் தமிழ்க் கலைக்கழகம் என்ற ஒரு பிரிவு செயல்படுகின்றது. காலத்திற்கேற்ற புதிய புதிய கலைச்சொற்களை உருவாக்குவதற்கும், ஏற்கெனவே பயன்பாட்டில் உள்ள சொற்களை எளிமைப்படுத்தவும், இக்கலைக்கழகம் தோற்றுவிக்கப்பட்டது. இக்கலைக்கழகம் இவ்வியக்கத்தில் பணியாற்றும் தொகுப்பாளர்கள், பதிப்பாசிரியர்கள், மற்றும் புறநிலையிலிருந்து சொல்லாக்க அறிஞர்கள் ஐவரையும் உறுப்பினர்களாகக் கொண்டு இயங்கி வருகின்றது. இதன் ஒருங்கிணைப்பாளராக இவ்வியக்ககத் தொகுப்பாளர் திருமதி ஜெ.சாந்தி செயல்பட்டு வருகிறார். இவ்வியக்ககத்தில் மாதம் இரண்டு கூட்டங்கள் நடத்தி, இக்கூட்டங்களின் வாயிலாக 1000 கலைச்சொற்களை இக்கலைக்கழகம் உருவாக்குகின்றது. உருவாக்கப்படும் கலைச்சொற்கள் அனைத்திற்கும் அரசாணை பெறப்பட்டு, அவை Sorkuvai.com என்ற வலைத்தளத்தின் வழியாக பொதுவெளிக்கு விடப்படுகின்றன. இதுவரை 82 கூட்டங்களில் 28,700 கலைச்சொற்கள் தெரிவு செய்யப்பட்டுள்ளன. இந்நிலையில், இம்மாதம் பெருந்தொற்றுக் காரணமாக 83ஆவது கூட்டம் இணையவழியில் நடத்தப்பட்டது. அலுவல் சார் உறுப்பினர்கள், அலுவல் சாரா உறுப்பினர்கள் கலந்து கொண்டார்கள். இக்கூட்டத்தில் இயக்ககப் பணியாளர்களால் தொகுக்கப்பெற்ற 600 கலைச்சொற்கள் ஆய்வுக்குட்படுத்தப்பட்டு, அவற்றில் 216 சொற்கள் ஏற்பளிக்கப்பட்டன.

# உணவே மருந்து



**மரு. கற்பகவள்ளி**
உறைவிட மருத்துவர்
அயோத்தி தாசர் பண்டிதர் மருத்துவமனை,
தேசிய சித்த மருத்துவ நிறுவனம், தாம்பரம்.

உணவே உயிர் வாழ்வதற்குத் தேவையாகவும், உணவே உடல் நோய்க்கு மருந்தாகவும், அவ்வுணவே பல நேரங்களில் உடல் நோயைக் கொடுக்கும் மருந்தாகவும் அமைவதுண்டு.

"நீரின்றமையா யாக்கைக் கெல்லாம்

உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே

உண்டி முதற்றே உணவின் பிண்டம்

உணவெனப்படுவது நிலத்தொடு நீரே"

எனும் புறப்பாடல் பழந்தமிழர்களின் உணவுசார் மருத்துவ அறிவைப் புலப்படுத்துகிறது.

"உணவே மருந்து"

என்பது சித்தர்களின் கூற்று, இதை நாமும் பலமுறை கேட்டுள்ளோம். ஆனால், உணவு எப்படி மருந்தாகும் என்ற கேள்வி பலருக்கு உண்டு.

உணவே மருந்தா? என்று கேட்டால், ஆம் உணவே மருந்து தான், அதை அக்காலம் முதல் இக்காலம் வரை நாம் நமக்கே தெரியாமல் பின்பற்றி வருகிறோம்.

உயிர்தாதுக்கள் – முக்குற்றங்கள்

'உணவே மருந்து என்பதைத் தெரியும் முன் நம் உடலை ஆளும் மூன்று உயிர்தாதுக்களைப் பற்றி அறிவோம். முழு உடலையும் மூன்றே மூன்று தாதுக்கள் ஆள்வதா! ஆம் சித்தர் கூறுவதாவது,

"அண்டத்தில் உள்ளதே பிண்டம், பிண்டத்தில் உள்ளதே அண்டம்".

இதன் பொருள் என்னவென்றால், அண்டம் என்னும் உலகமும், பிண்டமெனும் உடலும் வெவ்வேறல்ல ஒன்றுதான் என்பதேயாகும்.

இதற்கிணங்க, படைத்தல், காத்தல், அழித்தல் முதலியவற்றை இறைவன் நிகழ்த்தி உலகை ஆள்வதாக நம் முன்னோர்கள் கூறுவர். அவ்வாறே "வாதம், பித்தம், கபம்" ஆகிய மூன்று உயிர் தாதுக்களும் முறையே நம் உடலை படைத்தும், காத்தும், அழித்தும் நம்மை ஆள்வதாகவும் சித்தர்கள் கூறுவதாவது.

"வாதமாய் உடலைப் டைத்து

பித்த வன்னியாய்க் காத்து

சேத்தும சீதமாய்த் துடைத்து" என்பதாகும்.

நம் உடலானது வாதம், பித்தம், கபம் இவற்றின் கூட்டுறவால் ஆனதே என்பதை அறிகிறோம். இவை மூன்றும் நன்னிலையில் உயிர் தாதுக்கள் என்றும், நோயுற்ற நிலையை (உயர்ந்தாலும், குறைந்தாலும்) அடையும் போது தீவினைகள், குற்றங்கள் என்றும் பெயர் பெறும். இம்மூன்று தாதுக்களும் கேடடைந்து குற்றங்களாக மாறும் போது ஒவ்வொரு குற்றங்களுக்கும் ஏற்ப உடலில் நோய்கள் தோன்றும். (எ.டு.)

வாத கேட்டால் – கைகால் குடைச்சல், மலக்கட்டு, மூலம்,

பித்த கேட்டால் – சுரம், பாண்டு, காமாலை, வயிறு எரிதல்

கப கேட்டால் – வீக்கம், இருமல், உடல் வெளுப்பு, மாரடைப்பு முதலிய நோய்களும்

உண்டாகும்.

மூன்று உயிர்தாதுக்களை சமநிலையில் வைத்திருந்தாலே, நம் உடல் நலம் காக்கப்பட்டு உடல் நோய்வாய்ப்படாமல் இருக்கும்.

நாம் அன்றாடம் உண்ணும் உணவு ஒவ்வொரு நாளும் மாறுபடும், ஒரே உணவை நாள்தோறும் உண்ண முடியாது. அப்படி இருக்க உணவு எப்படி மருந்தாகும் என்ற கேள்வி எழலாம், இதுபற்றி சிந்தித்து பார்த்தால், சில பொருட்களை மட்டும் நாம் நாள்தோறும் உணவில் சேர்த்துப் பயன்படுத்தும்படி, நம் முன்னோர்கள் நம்மை வழிநடத்தியுள்ளனர். அவை,

| | |
|---|---|
| 1. ஏலம் | 5. மஞ்சள் |
| 2. சீரகம் | 6. பெருங்காயம் |
| 3. சுக்கு | 7. வெந்தயம் |
| 4. பூண்டு | 8. மிளகு |

இப்பொருட்களையே நம் சித்தர்கள் நோய் நீக்கும் (திரிதோட) சமப்பொருட்கள் என்று பெருமைபடுத்தியுள்ளனர். இப்பொருட்களை சமையலில் சேர்ப்பதன் முக்கிய காரணம் என்னவென்றால், இவைகள் ஒவ்வொன்றும் உணவால் ஏற்படும் வாத, பித்த, கபத்தின் மிகுதி மற்றும் குறைவைச் சமநிலையில் காக்கும் வல்லமை கொண்டவை.

**ஏலக்காய்:**

இதை தூளாக நசுக்கி பயன்படுத்துவது முறையாகும்.

ஏலக்காயை இனிப்புப் பண்டங்களுடனும் அசைவ உணவுகளுடனும் சேர்த்துப் பயன்படுத்துவது வழக்கம். வெறும் நறுமணத்திற்கு மட்டுமல்ல இனிப்புப் பண்டங்களை அதிகமாக உட்கொள்ள கபமும், அசைவ பண்டங்களால் வாதமும், பித்தமும் உடலில் அதிகப்படும். இவைகளுடன் ஏலக்காயைச் சேர்ப்பதன் மூலம் வாதம், பித்தம், கபம் மூன்றும் சமநிலையடையும்.

**மஞ்சள்:**

மஞ்சளை இனிப்பு தவிர மற்ற எல்லா உணவுப் பொருட்களுடனும் சேர்த்து பயன்படுத்த அவற்றின் குற்றம் தணியும்.

அசைவ பண்டங்களில் மஞ்சளை சேர்ப்பதால் குற்றங்கள் நீங்குவதோடு அவற்றின் நாற்றமும் நீங்கும்.

**சீரகம் :**

சீரகம் – சீர்+அகம், அகம் என்னும் உள்ளுறுப்புகளைச் சீராக்குவதாலேயே இப்பெயர் பெற்றது.

கடுகுடன் சேர்த்து தாளிக்கப் பயன்படுத்தலாம். வெப்ப குணமுள்ள பொருட்களுடன் சேர்த்துப் பயன்படுத்தினால் அவற்றின், தீக்குணங்களை நீக்கும்.

சீரகத்தை மிளகுடன் சேர்த்து பொடித்து சாறு (இரசம்) செய்து பயன்படுத்த, முக்கனிகளாலும், பிறவற்றாலும் உண்டாகும் மந்தம் என்னும் செரியாமை நீங்கி, உடல் சீராகும்.

**பெருங்காயம்:**

இதைப் பொரித்து, பொடித்துப் பயன்படுத்துவதே நல்லது. பொரிக்காமல் பச்சையாய் வழங்க வாயாலெடுத்தல் (வாந்தி), தலைசுற்றல் முதலியன உண்டாகும். பெருங்காயம் நறுமண பொருளாவதோடு மட்டுமல்லாமல், பருப்பு வகைகளின் குற்றங்களை நீக்குவதில் சிறந்தது.

**சுக்கு:**

“சுக்குக்குப் புற நஞ்சு”

“கடுக்காய்க்கு அக நஞ்சு”

என்ற பழமொழிக்கிணங்க சுக்கின் தோல் நீக்கி, நசுக்கிப் பயன்படுத்துவதே நல்லது. சுக்கை கிழங்கு வகைகள் மற்றும் தேனீருடன் சேர்த்துப் பயன்படுத்த குற்றங்கள் சமநிலையடையும்.

**வெந்தயம்:**

வெந்தயத்தைச் சிறிது வறுத்துப் பயன்படுத்துவது நல்லதாகும்.

வெந்தயத்தை கார்ப்புச் சுவையுள்ள உணவுப் பொருட்களுடன் சேர்த்துப் பயன்படுத்த குற்றங்கள் சமநிலையடையும்.

**பூண்டு:**

பூண்டைத் தோலையும், முளையையும் நீக்கி பயன்படுதுவதே சிறந்தது.

பூண்டைக் கிழங்கு வகைகள் மற்றும் பருப்பு வகைகளின் குற்றங்களை நீக்கிச் சமநிலையடைய செய்யும்.

**மிளகு :**

நம் நாட்டில் மிளகாய் தோன்றுவதற்கு முன்பே வெகுகாலமாய் பயன்பட்டு வந்தது மிளகுதான். மிளகை இளம் வறுப்பாக வறுத்துப் பொடித்தும், பொடிக்காமலும் பயன்படுத்தலாம்.

இதை எல்லா பொருட்களுடனும் சேர்த்து செய்தால் அவைகளின் குற்றங்களை நீக்கும்.

“பத்து மிளகு இருந்தால் பகைவன் வீட்டிலும் உண்ணலாம்”

என்ற பழமொழியின் மூலம், மிளகு தேவையற்ற நஞ்சினைப் போக்கும் என்பதை உணரலாம்.

இதுவரை இப்பொருட்களின் முக்கியத்துவம் அறியாமல் நாம் இவைகளை ஒதுக்கியிருப்போம். ஆனால், இவ்வெட்டு பொருட்களே நம் உணவானது மருந்தாவதில் முக்கியப் பங்கு கொள்கிறது என்பதை உணர்ந்து உணவுடன் சேர்த்து உண்ண வேண்டும்.

# அரசு விழாக்கள்

## மே – 2021

### இராபர்ட் கால்டுவெல் (1814–1891)

இராபர்ட் கால்டுவெல் 1814–ஆம் ஆண்டு மே மாதம் 7–ஆம் நாள், அயர்லாந்து நாட்டில் கிளாடி என்ற ஆற்றங்கரையில் உள்ள சிற்றூரில் பிறந்தார். ஆங்கிலம், கிரேக்கம், பிரெஞ்சு பயின்ற கால்டுவெல் இந்தியா வந்து சேர்ந்தார். சமஸ்கிருதம் பயின்ற பின் இவர் துரு என்பவரிடம் தமிழ் பயின்றார்.

24 அகவையாக இருந்தபோது இலண்டன் மிஷனரி சொசைட்டி என்னும் கிறித்தவ மதக் குழுவினருடன் சேர்ந்து, 1838 சனவரி 8–ஆம் நாள் சென்னைக்கு வந்து தமது பணியைத் தொடங்கினார்.

கால்டுவெல்லுக்குத் திருநெல்வேலி மாவட்டம் இடையன் குடியில் திருத்தொண்டராகப் பணிபுரியும் பொறுப்புத் தரப்பட்டது. இடையன்குடியில் சுமார் 50 ஆண்டு காலம் பணிபுரிந்து வந்த கால்டுவெல் சமயப் பணிகளுடன் சமூகப் பணியும் ஆற்றினார்.



திருச்சபையினர் பயன்படுத்தி வந்த பிரார்த்தனை என்னும் நூலைத் திருத்தியமைக்கும் குழுவின் தலைவராக இருந்து அப்பணியினைக் கால்டுவெல் செம்மையாகச் செய்து முடித்தார். இவர் கொற்கைத் துறைமுகத்தில் அகழ்வாராய்ச்சிப் பணியில் ஈடுபட்டார். அங்குக் கிடைத்த சிப்பிகள், மண்பாண்டங்கள் மூலம் பழந்தமிழரின் கடல் வாணிகத்தைப் பற்றி விளக்கினார். இலங்கை மன்னன் விஜயன், பாண்டியன் மகளை மணந்ததையும் இவர் பதிவு செய்தார். தமிழரின் தொன்மையையும் தமிழ்மொழியையும் ஆழமாய் ஆய்வு செய்யத் தொடங்கினார்.

கால்டுவெல் முதன் முதலாகத் தமிழினை மற்ற மொழிகளுடன் ஒப்பீடு செய்த பெருமைக்குரியவர். இவர் திராவிட மொழிகளைத் திருந்திய மொழி என்றும் திருந்தா மொழி என்றும் இரண்டு வகையாகக் கூறினார். திருந்திய மொழியில் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளுவம், குடகு என்ற ஆறு மொழிகளையும், திருந்தாமொழிகளில் தோடர், கோடா, பிராகூய், மேலர், ஒரியர், கூவர் ஆகிய ஆறு மொழிகளையும் வைத்தார்.

தமிழ்மொழியிலிருந்து பிறந்த தெலுங்கும், கன்னடமும் ஆரியத் தொடர்பு கொண்டவை என்று விளக்கிக் கூறினார். தமிழ் தனித்து இயங்கும் ஆற்றல் உடையது, தொன்மையும் செம்மையும் கொண்ட தமிழின் வளம் சிறப்புடையது என்றார். இவரின் இத்தகைய ஆய்விற்காக கிளாஸ்கோ பல்கலைக்கழகம் டாக்டர் பட்டம் வழங்கிச் சிறப்பித்தது.

1856–இல் "A comparative grammar of the Dravidan of South Indian Family language" எனப்படும் "திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்" என்ற நூலினை இயற்றினார். கால்டுவெல்லின் ஒப்பிலக்கணம் என்னும் நூல் 1856–இல் முதல் பதிப்பாகவும், 1875–இல் இரண்டாம் பதிப்பாகவும்

வெளிவந்தது. 1913–இல் இந்நூலின் திருத்திய வெளியீடு வந்தது. 1956–இல் சென்னைப் பல்கலைக்கழகம் இந்நூலை வெளியிட்டது.

1881–இல் நெல்லை மாவட்ட வரலாற்றினை கால்டுவெல் ஆங்கிலத்தில் எழுதினார். பாண்டிய நாடு ரோம் நாட்டுடன் தொடர்பு கொண்டிருந்ததையும், கிரேக்கர்கள் தமிழ்நாட்டில் வாணிபம் செய்ததையும் இவர் குறிப்பிட்டுள்ளார்.

கொற்கைத் துறைமுகத்திற்குச் சீனரும் பிறநாட்டினரும் வாணிபம் செய்ய வந்ததை எழுதியுள்ளார். நற்கருணை தியான மாலை (1853), தாமரைத் தடாகம் (1871), ஞான ஸ்நானம் (கட்டுரை), நற்கருணை (கட்டுரை), பரதகண்ட புராதனம் போன்ற தமிழ் நூல்களையும், திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் (1856), திருநெல்வேலியின் அரசியல் பொது வரலாறு (1881) ஆகிய ஆங்கில நூல்களையும் கால்டுவெல் அவர்கள் இயற்றியுள்ளார்.

கால்டுவெல் இடையன்குடியில் ஓர் ஆலயத்தையும் நிறுவினார். தமிழுக்குப் பெரும் பணியாற்றிய இராபர்ட் கால்டுவெல் 1891–ஆம் ஆண்டு ஆகத்து மாதம் 28–ஆம் நாள் கொடைக்கானலில் இயற்கை எய்தினார். அவரது உடல் இடையன்குடிக்குக் கொண்டு வரப்பட்டு, அவரால் கட்டப்பட்ட கோயிலிலேயே அடக்கம் செய்யப்பட்டது. பேராயர் இராபர்ட் கால்டுவெல் நினைவில்லம், திருநெல்வேலி மாவட்டம், இராதாபுரம் வட்டம், இடையன் குடியில் அமைக்கப்பட்டு 17.02.2011 அன்று திறந்து வைக்கப்பட்டது.

**பெரும்பிடுகு முத்தரையர் (கி.பி.600–630)**

முத்தரையர் மன்னர்களில் சிறப்பாக ஆட்சி செய்தவர் பெரும்பிடுகு முத்தரையன் என்னும் சுவரன் மாறன் ஆவார். இவர் இரண்டாம் பெரும்பிடுகு முத்தரையர் என அழைக்கப்படுகிறார். தந்தையின் பெயரைத் தன் பெயருக்கு முன்னால் வைத்துக்கொள்வது என்ற பண்டைய மரபின்படி தன்னுடைய தந்தையின் பெயரான பரமேசுவரன் என்பதிலுள்ள சுவரன் என்ற பெயரையும் மாறனையும் இணைத்துச் சுவரன் மாறன் என்றழைக்கப்பட்டார்.

மேலும் இவர் அஞ்சாமை, வீரம், வெற்றி, அரசியல் திறன் கலையார்வம், புலவரைப் போற்றும் மாண்பு, இறையன்பு போன்ற பல நற்பண்புகளின் நாயகனாய் விளங்கியவர் ஆவார்.

முத்தரையர் வரலாற்றில் மட்டுமின்றி, தமிழக வரலாற்றில் தனித்ததோர் இடத்தினைப் பெற்றுள்ள இம்மாவீரன் தஞ்சைக்கோன், சத்ருகேசரி, ஸ்ரீ சத்ருமல்லன், அதிசாகசன், அபிமானதீரன், வான்மாறன், ஸ்ரீமாறன், செருமாறன், வேல்மாறன், சாத்தான் மாறன், தமராலயன், ஸ்ரீ கள்வர் கள்வன், கொடும்பாளூர் காய்ந்தெறிந்தான் முதலான தோரணையான விருதுப் பெயர்களைப் பூண்டிருந்தார்.



முத்து + அரையர் = முத்துக்கள் கிடைக்கும் பாண்டிய நாட்டிற்குத் தம்மை அரசர் என்று அழைத்துக் கொண்டனர். சேர, சோழ, பாண்டியர் காலத்தில் சிற்றரசர்களாக ஆட்சிப் புரிந்ததால் மூன்று + தரை எனப் பொருள் கொண்டு முத்தரையர் என பெயர் கொண்டனர்.

முத்தரையர் குடுமியான் மலையைத் தலைநகராகக் கொண்டும், தஞ்சை மாவட்டம் செந்தலை, வல்லம் படுகையை தலைநகராகக் கொண்டு ஆட்சிச் செய்தனர். இந்த மரபில் இடம் பெற்ற இரண்டாம் பெரும்பிடுகு முத்தரையர் எனும் மாமன்னர் தனது கொடியில் வேலும், கயலும் பொறித்தவராவார். அதனால், ‘வெங்கட் பொருகயல் சேர் வேல் கொடியோன்’ எனப் பாராட்டப்படுகிறார்.

பெரும்பிடுகு முத்தரையரின் பட்டப் பெயர்களுள் சிறப்பு வாய்ந்தது கள்வர் கள்வன் என்பதாகும். இந்தப் பட்டப்பெயரின் பொருள் களப்பிரர்களின் எதிரி என்பதாகும். களப்பிரர்களை தமிழ்நாட்டிலிருந்து விரட்டியடித்த பெருமை இரண்டாம் பெரும்பிடுகு முத்தரையரையே சாரும்.

சங்க காலத்திற்கும், பிற்கால சோழர் காலத்திற்கும் இடைப்பட்ட காலம் முத்தரையர் காலம் எனக் குறிப்பிடும் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றான நாலடியாரில் ‘முத்தரையர்’ என்னும் சொல் பெரிதும் இடம்பெறுகிறது.

கோனாட்டு, கண்ணனூர், அண்ணல்வாயில், காந்தளூர், செம்பொன்மாரி, காரை, புகழி, வெண்கோடல், அந்தியூர் போன்ற போர்க்களங்களில் சேரர், பாண்டியர், கொடும் பாளூர் வேளிரை வென்று

தமிழக வரலாற்றில் தலையாய இடத்தினையும் நிலையான புகழினையும் சுவரன் மாறன் பெற்றுள்ளார்.

சுவரன் மாறனின் அரசவைக் களத்தில் ஆச்சர்யர், அநிருத்தர், கோட்டாற்று இளம் பெருமானார், அமரு நிலையாயின குவாவன், காஞ்சன், பாச்சில் வேள், நம்பன் முதலான புலவர்கள் இருந்தனர்.

முத்தரையர் காலத்தில்தான், சங்க இலக்கியங்களை அடுத்து இலக்கியங்கள் படைக்கப் பெற்றன. முத்தரையர் காலத்தில் வெண்பாவும் கட்டளைக் கலித்துறையுமே சிறந்து விளங்கின.

வீரத்தின் உலைக்களனாய், வெற்றியின் நிலைக்களனாய் வாழ்ந்த ஆற்றல் மறவனான இவர், களம் பல கண்டு, வெற்றிகள் பல கொண்டு, பல்லவரின் பெருமையைப் பாரினில் உயர்த்துவதில் முனைந்து செயல்பட்டார் என்று வரலாறு பதிவு செய்திருக்கிறது.

'பிடுகு' என்ற சொல் தெலுங்குச் சொல்லாகும். 'இடி' என்று அதற்குப் பொருளாகும். 'பெரும்பிடுகு' என்றால் 'பேரிடி' என்று பொருள்படும். இவரின் சிறப்பை மக்கள் அறிந்து கொள்ளும் வகையில் திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் திருச்சிராப்பள்ளி பாரதிதாசன் சாலையில் அவரது திருவுருவச் சிலை அமைத்து 07.02.1996 அன்று திறக்கப்பட்டது.

தமிழ்நாடு அரசின் சார்பில், திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் ஆண்டுதோறும் மே 23–ஆம் நாளன்று அன்னாரது பிறந்த நாள் விழா சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகிறது.

### விடுதலைப் போராட்ட வீரர் வெள்ளையத் தேவன்

வீரபாண்டிய கட்டபொம்மு மகாராஜாவுக்குப் பிள்ளைகள் இல்லாததால் வெள்ளையத் தேவனை ஏற்பு மகனாக எடுத்து வளர்த்து வந்தார். சல்லிக் கட்டுக் காளைகளை அடக்குவதில் மகாசூரன். போர்க்களம் என்றால் அவருக்கு மிகவும் விருப்பம். வெள்ளையர்கள் வீரபாண்டியரிடம் கப்பம் கேட்டு வந்தபோது முதலில் சீறிப் பாய்ந்தது வெள்ளையத் தேவன்தான். அடங்காத காளை ஒன்றை வைத்திருந்த வெள்ளையம்மாள் என்ற பெண், அந்தக் "காளையை அடக்குபவருக்குத்தான் நான் மாலையிடுவேன்" என்று சூளுரை செய்திருந்தாள். அதை அறிந்த வெள்ளையத் தேவன் அக்காளையை அடக்கி வெள்ளையம்மாளை மணந்து கொண்டார்.

இந்நிலையில்தான் பானர்மேன் என்ற ஆங்கிலத் தளபதி பாஞ்சாலங்குறிச்சியைக் கைப்பற்றும் நோக்கத்தோடு படையெடுத்து வந்தான். இவர்களை எதிர்த்துக் கட்டபொம்மனும் போரிட்டான். அந்தச் சமயம் வெள்ளையத் தேவனும் வெள்ளையம்மாளும் புதுமணத் தம்பதிகள். அப்போதுதான் வெள்ளையம்மாள் கருவுற்றிருந்தாள்.



போருக்கு முதல் நாள் தீய கனவுகளைக் கண்ட வெள்ளையம்மாள் போருக்குச் செல்ல வேண்டாம் என்று தன் கணவனைக் கெஞ்சினாள். விடாப்பிடியாகச் சென்று போர் புரிந்து ஆங்கிலேயர்களை வேட்டையாடிக் கொன்றார். போர் முடிந்துவிட்டது என்று நினைத்துக் கோட்டையின் மீது நின்று தன் படைகளுக்குக் கட்டளை இட்டுக்கொண்டிருந்த வெள்ளையத் தேவனை ஆங்கிலேய சிப்பாய் ஒருவன் போரின் நெறிமுறைகளுக்கு மாறாகச் சுட்டுக் கொன்றான்.

இதை சற்றும் எதிர்பாராத வெள்ளையத் தேவன் கோட்டையிலிருந்து விழுந்து மடிந்தான். இறந்த அவன் உடலை வீரபாண்டிய கட்டபொம்மன் தன் மடியில் வைத்துக் கதறி அழுதார். கணவன் இறந்த செய்தி கேட்டு ஓடி வந்து போர்க்களத்தில் தலைவிரி கோலமாக ஒப்பாரி வைத்தாள் வெள்ளையம்மாள். பின் போர் முறைக்கு மாறாகத் தன் கணவனைக் கொன்ற கயவனை வெள்ளையம்மாள் குத்திக் கொன்று, வெள்ளையத் தேவனின் இறப்புக்குப் பழி தீர்த்துக் கொண்டாள்.

சுதந்திரப்போராட்ட வீரர் வெள்ளையத்தேவன் மணி மண்டபம் தூத்துக்குடி மாவட்டத்தில் ஸ்ரீவைகுண்டம் வட்டம், தூத்துக்குடி பாளையங்கோட்டை ரோடு, வல்ல நாடு அரசு உயர்நிலைப் பள்ளி அருகில் அமைக்கப்பட்டு 21.9.2007 அன்று திறக்கப்பட்டது.